# திருக்குறள்

பாயிரம்

**வான் சிறப்பு:**

- நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி
  தான்நல்கா தாகி விடின்.
- சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
  வறக்குமேல் வானோர்க்கு மீண்டு.

**நீத்தார் பெருமை:** ★

- துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து
  இறந்தாரை யெண்ணிக்கொண் டற்று.
- ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமான்
  இந்திரனே சாலுங் கரி.
- நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
  மறைமொழி காட்டி விடும்.
- அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
  செந்தண்மை பூண்டொழுக லான்.

**அறன் வலியுறுத்தல்:** ★

- அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
  மறத்தலி னூங்கில்லை கேடு.
- அழுக்கா றவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
  இழுக்கா வியன்ற தறம்.
- அறத்தான் வருவதே இன்பமற் றெல்லாம்
  புறத்த புகழு மில.

இல்லறவியல்

**இல்வாழ்க்கை:** ★

- அன்பு மறனு முடைத்தாயின் இல்வாழ்க்கை
  பண்பும் பயனு மது.
- துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
  இல்வாழ்வா னென்பான் துணை.
- அறனெனப் பட்டதே இல்வாழ்க்கை அஃதும்
  பிறன்பழிப்ப தில்லாயி னன்று.
- வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
  தெய்வத்துள் வைக்கப் படும்.

**வாழ்க்கைத் துணை நலம்** ★

- பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
  திண்மையுண் டாகப் பெறின்.
- தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
  பெய்யெனப் பெய்யு மழை.
- புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை இகழ்வார்முன்
  ஏறுபோற் பீடு நடை.

**மக்கட் பேறு:** ★

- பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த
  மக்கட்பே றல்ல பிற.
- அமிழ்தினு மாற்ற இனிதேதம் மக்கள்
  சிறுகை அளாவிய கூழ்.
- மக்கண்மெய் தீண்ட லுடற்கின்பம் மற்றவர்
  சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு.
- குழலினிது யாழினி தென்பதம் மக்கள்
  மழலைச்சொற் கேளா தவர்.
- தந்தை மகற்காற்று நன்றி அவையத்து
  முந்தி யிருப்பச் செயல்.
- ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
  சான்றோ னெனக்கேட்ட தாய்.
- மகன்றந்தைக் காற்று முதவி இவன்றந்தை
  என்னோற்றான் கொல்லெனுஞ் சொல்.

**அன்புடைமை:** ★

- அன்பிற்கு முண்டோ அடைக்குந்தா ழார்வலர்
  புன்கணீர் பூசல் தரும்.
- அன்போ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்கு
  என்போ டியைந்த தொடர்பு.
- அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
  மறத்திற்கு மஃதே துணை.
- அன்பின் வழிய துயிர்நிலை அஃதிலார்க்கு
  என்புதோல் போர்த்த உடம்பு.

**விருந்தோம்பல்** ★

- இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
  வேளாண்மை செய்தற் பொருட்டு.
- மோப்பக் குழையு மனிச்சம் முகந்திரிந்து
  நோக்கக் குழையும் விருந்து.

**இனியவை கூறல்** ★

- அகனமர்ந் தீதலின் நன்றே முகனமர்ந்து
  இன்சொல னாகப் பெறின்.
- பணிவுடைய னின்சொல னாதல் ஒருவற்கு
  அணியல்ல மற்றுப் பிற.
- இனிய உளவாக இன்னாத கூறல்
  கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

**செய்ந் நன்றியறிதல்.** ★

- செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும்
  வானகமு மாற்ற லரிது.
- காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
  ஞாலத்தின் மாணப் பெரிது.
- தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
  கொள்வர் பயன்றெரி வார்.
- நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது
  அன்றே மறப்பது நன்று.